# ஜோசெப்பினா படம் உள்ள அழகிய போர்வை

எலெயானோர் கேர்



தமிழில் கிருஷ்ணன்

# ஜோசெப்பினா படம் உள்ள அழகிய போர்வை

எலெயானோர் கேர்

தமிழில் கிருஷ்ணன்



## ஜோசெப்பினா

அந்த ஆண்டு 1850 மே மாதம். பெய்த் (faith) மிகவும் உற்சாகமாக  இருந்தாள்

அவள் குடும்பம்  கலிஃபோர்னியாவிற்கு போவதற்க்கு தயாராகி கொண்டிருந்தார்கள். ஒரு குதிரை வண்டியும் தயாராகி கொண்டிருந்தது

அம்மா “ஜோசெப்பினாவையும் அழைத்து செல்லலாம்” என்று கெஞ்சினாள் பெய்த்

ஜோசெப்பினா பெய்த்தின் மிக பிரியமான கோழி. அவளுக்கு ஜோசெப்பினா தன்னையே சுற்றி வருவதும், தன் கைக்குள் அடக்கமாக வந்து உட்கார்ந்து கொள்வதும் மிகவும் பிடித்திருந்தது. நீண்ட பயணித்திற்காக அம்மா பிரட் செய்து கொண்டிருந்தாள்.

“அப்பாவிடம் நீ கேள்” என்று கூறினாள்





அப்பாவும் அண்ணன் ஆதாமும் வீட்டு சாமான்களை வண்டியில் ஏற்றி கொண்டிருந்தனர். பெய்த் “ஜோசெப்பினாவையும் கூடவே அழைத்து செல்லலாம் என்று கூறினாள். “வண்டியில் செல்லப் பிராணிகளுக்கு எல்லாம் இடமில்லை” என்று கூறிவிட்டார் அப்பா

இது அநியாயமா இருக்கே அப்பா.

ஆதாம் மட்டும் தன்னுடைய குதிரையை கூடவே அழைத்து வருவானம். குதிரை செல்ல பிராணியல்ல என்றார் அப்பா. ஒரு மூட்டை சோளத்தை சுமைக்கும் என் குதிரை, உன் ஜோசெப்பினா என்ன செய்யும் என்று கேலி செய்தான் ஆதாம். அந்த கோழியால் முட்டை கூட இட முடியாது. அதை நாம் சாப்பிடவும் முடியாது.

கண்ணில் நீர் மல்க பெய்த் அம்மாவிடம் ஓடினாள். அம்மா தான் உட்கார்ந்திருக்கும் ஆடும் நாற்காலியிலிருந்து பெய்த்தை தழுவி கொண்டாள். நாம் அனைவரும் ஏதேனும் பொருளை விட்டு விட்டு தான் வர வேண்டும். எனக்கு இந்த நாற்காலி மிகவும் பிடித்தமானது ஆனால் அதற்கு வண்டியில் இடமில்லை. பெய்த் அமைதியாக அழுதாள்.



ஜோசெப்பினாவை சிறு
குஞ்சியிலிருந்தே நான் தான்
வளர்த்து வந்தேன்.
அதை இனி யார்
கவனிப்பார்கள்?





நம் பக்கத்து வீட்டுக்காரர்கள்
யாரவது கவனித்து கொள்வார்கள்
நீ கவலைப்படாதே
என்றாள் அம்மா. ஆனால் குஞ்சு
பொறிக்காத, தின்பதற்கும்
கடினமான கோழியை யார்
கவனிப்பார்கள் ?



விடிய காலையிலேயே வண்டி தயாராக நின்றது

அழகிய நீல நிற துணி வண்டியை சுற்றியும் கட்டபட்டு இருந்தது, வெள்ளை நிற விரிப்பு ஒன்று மேல் கூரையில் கட்டியிருந்தது அழகு சேர்த்தது

அம்மா ஆச்சிரியமாக பார்த்து கொண்டிருந்தாள்

நான்கு சக்கரங்களுக்கு மேல் பெரிய பூந்தொட்டி வைத்தாற்போல் என்று கூறினாள்

பெய்த் எதுவும் கூறாமல் மௌனமாக இருந்தாள். அவளுடைய கவலையெல்லாம் ஜோசெப்பினா மீதே இருந்தது.



சாப்பாட்டு பொருட்களை எல்லாம் ஏற்றியாகி விட்டதா? அம்மா அப்பாவிடம் கேட்டு கொண்டிருந்தாள். சமையலறை சாமான்கள்? ஆகிவிட்டது என்றார் அப்பா. மெத்தையை தவிர எல்லாவற்றையும் ஏற்றியாகி விட்டது . ஜோசெப்பினா என்று மனதில் கூறி கொண்டாள் பெய்த். அப்பா மெத்தையை வண்டியில் ஏற்றினார். அம்மா அதன் மேல் அழகான போர்வை ஒன்றை கவனமாக விறித்தாள்.



பெய்த் ஜோசெப்பினாவை அனைத்து கொண்டு கூறினாள் “என் அருமை கோழியை மட்டும் எப்படி இங்கே விட முடியும்?

இந்த அழகான போர்வையை எப்படி இங்கு விட்டு விட முடியும் . நம் வாழ்க்கையின் சந்தோசம், சோகம் எல்லாம் இதில் அடங்கி உள்ளது.



ஜோசெப்பினா இங்கேயே இருக்கட்டும். பெய்த் அதை கீழே போடு  என்றார்

பெய்த் அங்கேயே நின்றுகொண்டு ஜோசெப்பினாவின் இறகுகளை தடவி கொண்டிருந்தாள். அழுகையை அடக்கி கொண்டிருந்தாள். அம்மா அப்பாவை எக்கத்தோடு பார்த்தார். சரி! பெய்த் என்றார் அப்பா ஆனால் ஏதேனும் தொந்தரவு வந்தால் அவளை உடனே இறக்கி விடுவேன் என்று கூறினார்.
நன்றி அப்பா என்றாள் பெய்த் மகிழ்ச்சியுடன். ஜோசெப்பினா வை  பார்த்து கொள்வது என் பொறுப்பு என்றாள்.





அம்மா போர்வை இருந்த பையை கொடுத்து, இதில் உனக்கு நேரம் கிடைக்கும் போதெல்லாம் வேலை செய் என்று கொடுத்தாள். நினைவுகளை மறவாமல் இருப்பதற்கு நூலினால் நாம் காண்பதை போர்வையில் சித்திரமாக தைப்பது அவர்களுடைய சமூகத்தில் எவ்வளவு முக்கியம் என்பதை அறிவாள்.

பெய்த் ஜோசெப்பினாவை கூண்டில் அடைத்தாள். அப்பா அந்த கூண்டை வண்டியில் கூரையில் உள்ள மேல் கொக்கியில் மாட்டினார். பெய்த்தையும் தூக்கி அதன் அருகில் அமர வைத்தார்.





கலிபோர்னியா போறோம் !
என்று உரக்க கூறினார் அப்பா

சாட்டையை விட்டெறிந்தார்,
மாடுகள் நகர ஆரம்பித்தன.

மாடுகளின் மணி சத்தம் கேட்க
வண்டியின் சக்கரம் சரக் சரக் என்ற
சத்தத்தோடு  நகர்ந்தது.

பெய்த் சந்தோசத்துடன்
ஜோசெப்பினாவை பார்த்தாள்.
இன்னும் சிறிது காலத்திற்கு இந்த
வண்டியே அவர்களுடைய வீடாகும்.
அவள் தன் பையிலிருந்து வெள்ளை
பருத்தி துணியை எடுத்தால்.
“என்னுடைய முதல் சித்திரத்தை நூற்க
போகிறேன்” என்று வண்டி சக்கரத்தை
கவனமாக நூற்க தொடங்கினாள்.



பெய்த் சந்தோசத்துடன்
ஜோசெப்பினாவை பார்த்தாள். இன்னும்
சிறிது காலத்திற்கு இந்த வண்டியே
அவர்களுடைய வீடாகும். அவள் தன்
பையிலிருந்து வெள்ளை பருத்தி
துணியை எடுத்தால். “என்னுடைய முதல்
சித்திரத்தை நூற்க போகிறேன்” என்று
வண்டி சக்கரத்தை கவனமாக நூற்க
தொடங்கினாள்.



## கலவரம்

இரவில் வண்டியை வட்டமாக மாடுகளை சுற்றி நிறுத்திவிட்டார்கள். பெண்கள் தீ மூட்டி அதன் சூட்டில் சமைத்தார்கள்.



சாப்பாட்டை தொடர்ந்து பாட்டும், பான்ஜோ இசையும் வாசித்தார்கள். பெய்த் நூற்பதை நிறுத்தி விட்டு ஜோசெப்பினவை அதன் கூட்டிலிருந்து சற்று வெளியே விட்டாள்.

திடிரென்று லொள் லொள்... என்ற சத்தம். ஒரு நாய் வெறியுடன் ஜோசெப்பினவை நோக்கி பாய்ந்தது. கோழியோ பயத்துடன் தட்டு தடுமாறி ஓடியது . ஜோசெப்பினா இங்கே திரும்பி வா என்று பெய்த் கத்தினாள்







ஜோசெப்பினா அதற்குள் கட்டிவைத்திருந்த குதிரை, மாடுகளின் நடுவே மாட்டிக்கொண்டது. கோழி கத்திகொண்டே பறக்க, குதிரைகள்கனைக்க,

மாடுகள்  உதைத்து கொண்டு மா…மா… என்று கத்திக்கொண்டே ஓட   ஒரே கலவரமாகிவிட்டது.

“அந்த உதவாக்கரை கோழி !” அப்பா கத்திக் கொண்டே அதை பிடிக்க ஓடினார்.





“என்ன ஒரு களேபரத்தை உண்டாகிட்டா இந்த ஜோசெப்பினா” அப்பா கோபமாக திட்டினார்

இனியும் அதை நம்மூடன் கொண்டு போக முடியாது

“இந்த ஒருமுறை மணிச்சிக்கிங்க அப்பா” என்று கெஞ்சினாள்  பெய்த்

“அந்த நாயின் தப்பு”  “பெய்த் உண்மையைத் தான் சொல்கிறாள்

நான் தான் பார்த்துகிட்டு தான் இருந்தேனே” என்றாள் அம்மா

ஜோசெபினாவை மீண்டும் கூண்டில் அடைத்தார் அப்பா இது கடைசி தடவை என்று கூறினார்.

அன்றிரவு ஜோசெப்பினா இனி தயவு செய்து கவனமாக நடந்து கொள் என்று செல்லம் கொஞ்சினாள்.
ஜோசெப்பினாவும் க்ளக் க்ளக் என்று தலையாட்டியது நல்ல நண்பர்கள் புரிந்து கொள்வது போல.





## காப்பாத்துங்க!

மீதி பயணத்தில் ஜோசெப்பினா மிகவும் அமைதியாக இருந்தது. அவ்வப்போது பெய்த் நூற்பதையே பார்த்து கொண்டிருக்கும். வெயில் அடித்தாலும், மழை பெய்தாலும், ஒரு சத்தம் கூட அதனிடமிருந்து வரவில்லை.

நரிகள் ஊளையிடும் போது கூட ஜோசெப்பினாவிடம் இருந்து மெலிய சத்தம் மட்டுமே வந்தது. ஒரு நாள் ஒரு விரிந்த சேறு நிறைந்த ஆற்றை கடக்க வேண்டியிருந்தது. ஜோசெப்பினா பயத்தில் கூவி கொண்டே இருந்தது. பெய்த் அதை கூண்டை விட்டு வெளியே எடுத்து அணைத்து கொண்டாள். பயப்படாதே நான் உன்னுடனே இருக்கிறேன் என்று ஆறுதலளித்தாள்.







மாட்டு வண்டியை நிதானமாக ஆற்றினில்
ஒட்டி சென்று கொண்டிருந்தார் அப்பா.
திடீரென்று பின்னாடி உள்ள சக்கரம்
திடுக்கென்று கீழே இறங்கியது.

வண்டி சரிந்த குழப்பத்தில் பெய்த்
ஜோசெப்பினாவை தன் கையிலிருந்து
தவற விட்டுவிட்டாள்.
ஜோசபீனாவை வெள்ளம் அடித்து
சென்றது .



காப்பாத்துங்க !

ஜோசெப்பினாவை யாரவது காப்பாற்றுங்கள் என்று கத்தினாள் பெய்த். ஆதாம் தண்ணியில் குதித்தான். புரண்டு ஓடும் வெள்ளத்தில் அவனால் தாக்கு பிடிக்க முடியவில்லை. மூன்று பேர் ஆற்றில் குதித்து அவர்களை  மீட்டு கொண்டு வந்தனர்.

அவ்வளவு தான் அப்பாவிற்கு  கோபம் பொத்தி கொண்டு வந்துவிட்டது. “ இந்த கோழியால்  முட்டையும் போட முடியாது, இதனால் வேறு எந்த பயனும் கிடையாது. இது போதாதென்று எங்கு போனாலும் இதனால் தொல்லை மட்டுமே. இப்போதே இதை தொரத்த வேண்டும்”





ஜோசெப்பினா அப்பொழுதே
தனது இறக்கையை விசிறி
கொண்டே கொக்குற கோ என கத்தி
கொண்டு ஒரு அழகான வெள்ளை
முட்டையை இட்டது. அட சக்க என
அப்பா அருகில் சென்றார்.

ஜோசெப்பினா மறுபடியும்
முட்டை இட தொடங்கி விட்டாள்.

“அற்புதம் இனி நல்ல முட்டைகள் நமக்கு
கிடைக்கும்” என்றாள் அம்மா

ஜோசெப்பினா தொடர்ந்து பெய்துடன்
தொடர்ந்து பயணித்தாள்



# திருடர்கள் !!

வசந்த காலம் போய் கோடை
காலமும்  வந்தது.

பாலை நிலத்தில் பயணித்து
கொண்டிருந்தனர், அது மிகவும் சூடாகவும்
வறட்சியாகவும் இருந்தது.

அவள் நூத்த துணிகளை எண்ணலானாள்.
பதினைந்து துணிகள் இருந்தது.

பாலை நிலத்தை நூற்பதென்று
தொடங்கினாள்.

கஷ்டங்கள் ஒன்றன் பின் ஒன்றாக
தொடர்ந்து வந்தது

மாட்டு வண்டியின் சக்கரங்கள்
தொடர்ந்து கழன்று விழுந்தன

உணவும் குறைந்து கொண்டே வந்தது

மூன்று மாடுகள் இறந்து விட்டது

அப்பா அவருடைய கருவிகளையும்,
அம்மாவுடைய அடுப்பையும்  தூக்கி எரிய
வேண்டியதாயிற்று

இரண்டு முதியவர்கள் இறந்து போயினர்

எல்லோர் முகத்திலும் ஒரு களைப்பு
தொற்றி கொண்டது யாருக்குமே
சிரிப்போ சந்தோசமே துளியும்  இல்லை

பெய்த் எப்போதும் பசியுடேனே பயணித்து கொண்டிருந்தாள்

ஜோசெப்பினாவுக்கு ஏதாவது தானியத்தையோ, விதைகளையோ தேடி கொடுத்தாள்

மலைகளில் பயணம் செய்யும் போது பாதைகள் மிகவும் கரடு முரடாகவும், செங்குத்தாகவும்  இருந்தன. ஒரு காலை பொழுதில் செவ்விந்தியர்கள் எருமை மாமிசமும், தண்ணீரும் கொண்டு வந்திருந்தார்கள். அதற்கு ஈடாக அம்மாவின் அழகிய போர்வையை கேட்டார்கள், நான் பசியால் சாவேனே தவிர இதை கொடுக்கவே முடியாது என்று உறுதியாக கூறி விட்டாள்.

பின்னர் ஜோசெப்பினாவை கேட்டனர். நான் சாவனே தவிர என் கோழியை கொடுக்கவே முடியாது  என்று கூறிவிட்டேன்.





அப்பா மீதம் இருந்த துணிகளை கொடுத்து உணவையும் தண்ணீரையும் பெற்று கொண்டார். நல்ல உணவு அருந்திய பின்னரே எல்லோருக்கும் போன உயிர் வந்தது போல் இருந்தது. மிக விரைவில் அந்த உணவும் தீர்ந்து போனது.

ஒரு நாள் அப்பா பெய்திடம் கூறினார் மீண்டும் செவ்விந்தியர்கள் வருவார்களேயானால் “ நாம்ஜோசெப்பினவை கொடுத்து தண்ணீர் பெற்று கொள்ள வேண்டும்” என்று பெய்த் கடவுளிடம் வேண்டி கொண்டாள் அவர்கள் வரவே கூடாதென்று.





அன்றிரவு கடுமையான குளிராக இருந்தது

எல்லா ஆண்களும் வண்டிகளின் கீழே படுத்து கொண்டனர்.

அம்மா அப்பாவிற்கும் ஆதாமிற்கும் போர்வைகளை கொடுத்து அனுப்பினாள்

அவளும், பெய்த்தும் பழைய போர்வைகளை கொண்டு உறங்கினர்

நள்ளிரவில் இரண்டு திருடர்கள் மெல்ல பதுங்கி அப்பா உறங்கி கொண்டிருக்கும் வண்டியின் அருகில் வந்தனர். அவர்கள் வைத்திருந்த போர்வையை திருட முயலும் போது ஜோசெப்பினா கொகொரொக்கோ என கூவிவிட்டது.





கோழி போட்ட சத்தத்தில் எல்லோரும் முழித்து கொண்டனர்.

திருடர்கள் ஓடியே விட்டனர்.

அப்பா வாய்விட்டு சிரித்தார் பல நாட்களுக்கு பின்னர்

ஜோசெப்பினா வயதானவளாய் இருக்கலாம் ஆனால் வேட்டை நாயை போன்ற விழிப்பு இருக்கிறது என்று பெருமையாக கூறினார்.

போய் வா ஜோசெப்பினா

அப்பா ஜோசெப்பினாவை கூண்டிலிருந்து வெளியே விடுவதற்காக நெருங்கி சென்றார். ஆனால் ஜோசெப்பினாவோ கூண்டில் எந்த ஒரு சத்தமும் இன்றி விழுந்து கிடந்தது. இதை கண்ட பெய்த் தன் முகத்தை தனது அம்மாவின் பின்னால் புதைத்து கொண்டாள்.



நீ தைரியமாக இருக்க வேண்டும் என்றாள் அம்மா ஜோசெப்பினா நீண்ட நல்ல ஒரு வாழ்க்கையை வாழ்ந்து விட்டாள். நீ அவளை நினைத்து சந்தோசப்பட வேண்டும் என்றார் அப்பா

அவள் நம்மக்கு உதவி செய்தே இறந்து போனாள் என்றான் ஆதாம்
யாராலும் பெரிதாய் ஆசுவாச படுத்தவே முடியவே இல்லை

அவள் அழுது கொண்டே இருந்தாள்.

அம்மா அவளை கட்டி அணைத்து கொண்டாள்.



மறுநாள் காலை அவளுக்கு இறுதிசடங்கு செய்து ஒரு நெடிய பைன் மரத்திற்கு அடியில் புதைத்தனர்

ஜோசெப்பினாவை என்னால் மறக்கவே முடியாது என்று அழுது கொண்டே கூறினாள்

பெய்த் தன் கண்களை துடைத்து கொண்டு அவள் பையிலிருந்து  பருத்தி துணியை எடுத்தாள்.

நான் ஜோசெப்பினாவின் நினைவாக ஒரு
பைன் மரம் படம் ஒன்றை நூற்ப்பேன் என்றாள்.



சீக்கிரமே அவர்களுக்கு உணவும் தண்ணீரும் கிடைத்தது. கலிபோர்னியா நகரமும் வந்து சேர்ந்தது. பெய்த் தான் கூறியபடி ஒரு அழகான பைன் மரம் நூற்திருந்தால் அந்த பருத்திஆடையில்.



அப்பா மரக் கட்டையால் ஆன சட்டம் ஒன்று செய்துகொடுத்தார். பெய்த் பருத்தியில் நூர்த்த படங்களை போர்வையில் தைக்க உதவினர். பெய்த்அந்த போர்வையை தன்னுடைய மெத்தையில் விரித்து கொண்டாள். அந்த போர்வையில் உள்ள படங்கள் அவர்களுடைய பயண நினைவுகளை எப்போதும் கண்முன் நிறுத்தின.



ஆசிரியர் பின்குறிப்பு

18 ஆம் நூற்றாண்டில் ஆயிர கணக்கில் அமெரிக்க மக்கள் வாழ்வாதாரத்திற்காக மேற்கு நோக்கி குடி பெயர்ந்தனர். மிஸ்ஸோரி நகரத்தில் இருந்து வசந்த காலத்தில் பயணத்தை தொடங்குவர். குடும்பங்களாக ஒன்று சேர்ந்து வண்டிகளை பூட்டி கொண்டு இந்த பயணத்தை மேற்கொள்வர். இது ஒருத்தருக்கு ஒருவர் உதவியாகவும், பாதுகாப்பாகவும் இருந்தது. கலிபோர்னியா நகரத்திற்கு வருவதற்கு குறைந்தது 6 மாதங்களாயின.

ஒவ்வொரு இரவும் பெய்த்
ஜோஸ்பினா படம் உள்ள
போர்வையின் அடியில் படுக்கும்
போது அவள் மிகவும்
மகிழ்ச்சியாக உறங்கினாள்

ஒவ்வொரு வண்டியிலும் உண்ண உணவும், சமைக்க பாத்திரங்களும், வேலைக்கு தேவையான கருவிகள், துணி மணிகள் , மரச்சாமான்கள் எல்லாம் எடுத்து செல்வார்கள் . காளை மாடுகள் குறைந்தது ஆறு ஜோடி களாவது ஒரு வண்டியை இழுப்பதற்கு இருக்கும். ஒவ்வொரு நாளும் குறைந்தது 12 மைல் தூரமாவது பயணிப்பார்கள். அடர்ந்த காடு, செங்குத்தான மலை, ஆழமான ஆறு, சூடான பாலைவனம் எல்லாம் கடந்தே அவர்கள் செல்லவேண்டிய ஊரை அடைவார்கள்.

குழந்தைகளுக்கு பள்ளிக்கூடங்கள் இல்லை, ஆனால் ஒவ்வொருவருக்கும் ஒரு வேலை இருக்கும் செய்வதற்கு. பெண்களும், சிறுமிகளும் நூற்பது, போர்வைகள் தைப்பது போன்ற வேலைகள் செய்தார்கள். போர்வைகளை குழந்தைகள் பிறந்த நாள் பரிசாகவும், திருமணங்களுக்கும் கொடுத்து மகிழ்ந்தனர். மிக சிறந்த போர்வைகளுக்கு போட்டிகளில் பரிசுகளும் கிடைத்தன.

போர்வைகளில் நூற்கப்பட்ட ஓவியங்கள் ஒரு குடும்பத்தின் குறியேடு போன்று இருந்தது. அதில் வரையப்பட்ட வண்டி சக்கரம், கள்ளி செடி மற்றும் பல ஓவியங்கள் இன்னும் வழக்கத்தில் இருந்து கொண்டு தான் இருக்கிறது. இன்னும் சில அருங்கட்சியங்களில் ஜோசெப்பினா படம் கொண்ட போர்வை போன்று பழங்காலத்து காட்சி பொருளாக வைத்திருக்கிறார்கள்.